உ

சிவமயம்

# காரைக்குடி நகரத்தார் தீர்மானம்



29 - 6 - 1949



விரோதி௵ ஆனிமீ ௰ [illegible]

காடுவெட்டிப் போட்டுக் கடிய நிலந்திருத்தி
விடுகட்டிக்கொண்டிருக்கும் வெல்வணிகர்- வீடுகட்டு
அன்றைக்கு வந்தளங்கள்! அம்மாள் இலக்குமிநீ
என்றைக்கும் நீங்கா(து) இரு.

உ

சிவமயம்

விரோதிஷு ஆனிமீ 16உ-க்கு 1949ஷு ஜூன்மீ 29உ புதன்கிழமை அறுபத்து மூவர் குருபூஜை மடத்தில் காரைக்குடி நகரத்தார்கள் கூடிப்பேசி முடிவு செய்து கொண்டதற்கு விபரம்:—

1. பிள்ளை பிறந்ததற்கும், ருதுவானதற்கும் விசாரிக்க வருகிறவர்களுக்குச் சந்தனம், குங்குமம், தாம்பூலமும், சர்க்கரை சீனி கற்கண்டு வகையில் ஏதாவதொன்றைத் தாம்பாளத்தில் வைத்தும் வழங்குகிறது. வேறெதுவும் கொடுப்பதில்லை. இதற்காகவும், பிள்ளைப் பானைச் சோற்றுக்காகவும் பண்டமோ பணமோ கொடுப்பது மில்லை; வாங்குவது மில்லை. சடங்கு கழிப்பதற்குப் பலகாரம் வகையரா செய்து கொடுத்து விடுவதும் வாங்கிக் கொள்ளுவது மில்லை.

2. கல்யாணம் பேசிமுடித்துக் கொள்ளுதல், முகூர்த்தம் வைத்துக் கொள்ளுதல்,

பெண்ணழைத்தல், செவ்வாய்க்குப் பழம் தேங்காய் கொடுத்தல், பொங்கல் வேவுகள், வேறேயிருந்த வருஷவேவு, தீர்த்தம் குடித்தல், மருந்து குடித்தல், பிள்ளைப் பேற்றிற்கு அழைத்தல், திரும்பக் கொண்டு போய் விடுதல், விளையாட்டுப் பெட்டி வேவு, பள்ளிக்கூடத்தில் வைத்தல், உபாத்தியாயரை ஆயா வீட்டிற்குக் கூட்டிவருதல், தச்சு செய்தல், நிலை வைத்தல், குடிபுகுதல், உபதேசங் கேட்டல் முதலிய விசேடங்களில் அந்தந்த ஐயாவகையும், தாயபிள்ளைகளும் மட்டும் இருந்து செய்து கொள்ளுகிறது. பங்காளிகள் சிநேகிதர்கள் யாரையும் கூப்பிடுவதும் போவதுமில்லை.

3. காப்புக்கட்டுப் புதுமை, ஸ்வீகாரப் புதுமை, கல்யாணம், சாந்திக் கல்யாணம், சதாபிஷேகம், முதலிய எந்த விசேஷங்களுக்கும் கூப்பிடுவதைத் தவிர அழைப்புக் கொடுக்கிற தில்லை.

30-5

4. காப்புக்கட்டுப் புதுமை ஸ்வீகாரப் புதுமைக்குத் தாய பிள்ளைகளும் கூடிக் கொள்ளுகிற பங்காளிகளும் ஒருவேளைப் பலகாரமும், ஒருவேளைச் சாப்பாடும் மட்டும் வைத்துக் கொள்ளுகிறது. புதுமை விசாரிக்க வருகிற கோவில் பங்காளிகள் சிநேகிதர்கட்கு சந்தனம் தாம்பூலமும், பானமும், சர்க்கரை சீனி கற்கண்டு வகையில் ஏதாவதொன்றைத் தாம்பாளத்தில் வைத்தும் வழங்குகிறது.

5. கார்த்திகைப் புதுமை, திருவாதிரைப் புதுமை செய்தால் அந்தந்த ஐயாவகைக்கும், தாயபிள்ளைகளுக்கும் ஒருவேளைச் சாப்பாடும் ஒருவேளைப் பலகாரமும் மட்டும் வைத்துக் கொள்ளுகிறது. பங்காளிகள் சிநேகிதர்கள் யாரையும் கூப்பிடுவதும் போவதுமில்லை.

6. கல்யாணத்திற்குத் தாயபிள்ளைகள் பங்காளிகள் முதலிய கூடிக் கொள்ளுகிறவர்களுக்கு இரண்டுவேளைப் பலகாரமும், இரண்டுவேளைச் சாப்பாடும், சாந்திக் கல்யாணம்

சதாபிஷேகம் ஆகிய விசேஷங்களுக்கு தாய பிள்ளைகள் பங்காளிகள் முதலிய கூடிக் கொள்ளுகிறவர்களுக்கு இரண்டுவேளைப் பலகாரமும், ஒருவேளைச் சாப்பாடும், மேற்கண்ட மூன்று விசேடங்களிலும் கோவில் பங்காளிகள் சிநேகிதர்கட்கு ஒருவேளைப் பலகாரம் மட்டும் வைத்துக் கொள்ளுகிறது.

7. கல்யாணத்தில் பெண்ணுக்கு சீதனம் ஒரு அயிட்டமாகவும், மாமியார் சாமான் தீன்சாமான் உள்பட கல்யாணம் முதல் தீர்த்தம் குடிப்பதற்கு முன்னதாக உள்ளதான சகல முறைகளுக்கும் சேர்த்து சம்பந்தப்புறத்தாருக்குக் கொடுக்கும் முறைத் தொகைகள் ஒரு அயிட்டமாகவும் ஆக இரு வகையாக மட்டும் பேசிக் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறது.

8. கல்யாணத்தில் பெண்ணுக்குச் சீர் கொடுக்கும் சாமான்களை காட்சிக்காகப் பரப்புவதில்லை.

9. கல்யாணத்தில் சீர் வைக்கப் போவது, மாப்பிள்ளை அறிவது, நாட் குறிப்பது, உப்பெடுத்துவது, கழுத்துரு வாங்கப் போவது, பெண்ணெடுக்கிக் காட்டுவது, பிள்ளை எடுக்கிப் பிறந்த வீட்டுக்குப் போவது, ஆகிய போய வருகிற முறைச் சடங்குகளை நடத்துவதுமில்லை அவற்றில் கலந்து கொள்ளுவதுமில்லை.

10. கல்யாணத்தில் பெண்வீட்டார் வேவு எடுத்துகிறது. மாப்பிள்ளை வீட்டார் திருப்பூட்டவந்து மணவறை நடத்திப் பெண்ணழைத்துக் கொள்ளுகிறது. பெண்ணழைத்துக் கொண்டு போய் விடும்பொழுது சீராட்டு, சீதனம், நாலுநாள் சீர்முறையும் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறது.

11. கல்யாணத்தில் மஞ்சள் நீராடும் போது பெண்வீட்டார் மாப்பிள்ளைக்கு ஒரு ஜோடி வேட்டி கொடுக்கிறது. வேறு எவ்வித

முறைக்கும். மாப்பிள்ளைக்கு வேட்டி கொடுப்பதில்லை.

12. கல்யாணத்தில் மாப்பிள்ளை பிள்ளையார் கோவிலுக்குப் போவதற்கும், திருப்பூட்ட வருவதற்கும் குதிரைமீது வருகிறது. ஊர் ஆலாத்தி எடுப்பதில்லை. மாப்பிள்ளையே திருப்பூட்டுகிறது. திருப்பூட்டுகிறதற்காகப் பண்டமோ பணமோ கொடுக்கிறதில்லை.

13. கல்யாணத்தில் ஒரே சாப்பாடாக இல்லா விட்டால் பெண்—மாப்பிள்ளை வீட்டார்கள் ஒருவர்க்கொருவர் முறைச் சாப்பாட்டிற்குப் போவதில்லை.

14. கல்யாணத்தில் சம்பந்தியாள், மாப்பிள்ளை, பெண் முதலிய யாருக்கும் பலகாரம் சாப்பாடு எடுத்துக் கொடுத்து விடுகிறதும் வாங்கிக் கொள்ளுகிறது மில்லை.

15. கல்யாணம் பேசி முடித்துக் கொள்ளுதல், முகூர்த்தம் வைத்துக் கொள்ளுதல்,

முதல் வழி, முதுவழி, மூன்றுவந்து வழி, ஆடி, கார்த்திகை, பிள்ளையார் நோன்பு, பொங்கல் வேவுகள், தீபாவளி முதலான எந்த விசேடங்கட்கும் சம்பந்தியாளுக்கு எந்தவிதமான பலகாரமோ, அதற்காகப் பணமோ எதுவும் கொடுப்பது மில்லை வாங்குவது மில்லை.

16. மாமவேவு எடுத்துகிறதற்கு கூடிக் கொள்ளுகிற பங்காளிகளுக்கும், மாமவேவு இறக்கிக் கொள்ளுகிறதற்கு மாமக்காரர்களுக்கும், உள்ளூராக இருந்தாலும் அயலூராக இருந்தாலும் நேரத்திற்கேற்க ஒருவேளைச் சாப்பாடோ அல்லது ஒருவேளைப் பலகாரமோ மட்டும் வைத்துக் கொள்ளுகிறது. பண்டமோ பணமோ கொடுக்கிறதுமில்லை வாங்கிக் கொள்ளுகிறதுமில்லை. சிநேகிதர்களைக் கூப்பிடுவதுமில்லை போவதுமில்லை.

17. எந்த விசேஷங்களிலும் தாயபிள்ளைகள், பங்காளிகள் உள்பட சகலருக்கும் சந்தன தாம்பூலமும், சர்க்கரை சீனி கற்கண்டு வகை

யில் ஏதாவதொன்றைத் தாம்பாளத்தில் வைத்தும் வழங்குகிறது. பெண்கட்கு மட்டும் மேற்கண்டவைகளுடன் புஷ்பமும் கொடுக்கிறது.

18. எந்த விசேஷங்களிலும் பங்காளிகள், தாயபிள்ளைகள், சிநேகிதர்கள் யாருக்கும் எந்த விதமான பண்டங்களோ பணமோ கொடுப்பதுமில்லை வாங்குவதுமில்லை. மாமக்காரர்கட்கும், சடங்குக்காரர்கட்கும் ஓலைப்பெட்டியில் பாக்கு பெரியபடி ஒன்றும் வெற்றிலையும் கொடுத்து வாங்கிக் கொள்ளுகிறது.

19. எந்த விசேஷங்களிலும் மாமிச உணவு தயார் செய்வதில்லை. பலகாரத்திற்கு பலகார வகை மூன்றும், காபி, தேயிலை பானங்களும் எண்ணெய் நெய், பொடி, சீனியுடன் தொட்டுக் கொள்ளுகிறதற்கு இரண்டு பதார்த்தமும், சாப்பாட்டிற்கு குழம்புக்கறி உள்பட கறி வகை ஏழும், குழம்பு வகை இரண்டும், சூப்பு அல்லது ரசம் ஒன்றும், பாயசம் ஒன்றும், வர்க்

கான்னம் ஒன்றும், அப்பளம், மாம்பழக்கிற்று, பலாச்சுளை, ஊறுகாயும் தவிர வேறெந்தப் பதார்த்தமும் செய்கிறதும் பரிமாறுகிறது மில்லை.

20. எந்த விசேஷத்திற்கும் ஒரு செட்டு மேளம் மட்டும் வைத்துக் கொள்ளுகிறது. பியாண்டு, கதா காலக்ஷேபம், சங்கீதக் கச்சேரி நடனக்கச்சேரிகள், வாணவேடிக்கைகள் வைப்பதில்லை.

21. ஊர்ப்பாக்கு, ஊர்ச்சினிக்காக கோவிலுக்குக் கொடுப்பதைத் தவிர, ஊர்ப்பாக்கு ஊர்ச்சினி அல்லது அதற்காகப் பணம் கொடுப்பதுமில்லை வாங்குவது மில்லை.

22. எந்த விசேஷங்களிலும் சொல்லிக் கொள்ளுபவர்கட்கு பாக்கு வெற்றிலையோ பழமோ அல்லது அதற்காகப் பணமோ கொடுப்பது மில்லை வாங்குவது மில்லை.

23. பண மெழுதிக் கொள்ளுகிற விசேஷங்களுக்கு மாமக்காரர்கள் சடங்குக்காரர்

களைத் தவிர கூடிக் கொள்ளுகிறவர்கள் யாவரும் ரூ. 0-2-0 விதம் பணம் எழுதுகிறது பாக்குப் பணம் கொடுப்பதும் வாங்குவது மில்லை.

24. சாந்திக் கல்யாணம், சதாபிஷேகம் முதலிய விசேஷங்களில் விசேஷக்காரர்கள், சொந்தக்காரர்கட்கு வேட்டி, சேலை வழங்குவதில்லை. ஷை விசேஷங்கட்காக சுவாமி புறப்பாடு நடத்துகிறதில்லை.

25. துஷ்டிச் சடங்குகளை பத்து நாட்களுக்குள் நடத்தி முடிக்கிறது விசேஷ காரணத்தினுல் சடங்குகளை நிறைவேற்றச் சுணங்கினுல் அதற்கு விதி விலக்குண்டு.

26. துஷ்டி, அல்லது சேலை போடுகிறது உள்ளூராக இருந்தாலும், வெளியூராக இருந்தாலும் கூடிக்கொள்ளுகிற பங்காளிகட்கு ஒரு வேளைச் சாப்பாடும் ஒரு வேளைப் பலகாரமும் மட்டும் வைத்துக் கொள்ளுகிறது. சிநேகிதர்களை சாப்பாடு பலகாரத்திற்கு அழைப்பது மில்லை, போய்ச் சாப்பிடுவது மில்லை. யாருக்கும் எவ்வித பண்டமோ பணமோ கொடுப்பது மில்லை வாங்குவது மில்லை. துஷ்டி விசாரிக்க வருகிறவர்கட்கு சோடாக்

கலர், காபி கொடுப்பது மில்லை வாங்கிச் சாப் பிடுவது மில்லை.

27. தலைத் திதிக்கு அந்தந்த ஐபாவகை யையும் தாய பிள்ளைகளையும் தவிர பங்காளி கள், சிநேகிதர்கள் யாரையும் கூப்பிடுவது மில்லை போவதுமில்லை.

28. துஷ்டி வீட்டில் சாப்பிட வேண்டிய வர்களுக்கு சடங்கு நடக்கும் பத்து நாட்களுக் குள் சாப்பாடு செய்து வைக்க வேண்டுமே தவிர வராதவர்கட்கு அரிசி பருப்போ அதற் காகப் பணமோ கொடுப்பது மில்லை வாங்குவது மில்லை. பத்து நாட்களுக்குப் பிறகு கேதம் விசாரிக்க வருபவர்கட்குச் சாப்பாடு செய்கிற தில்லை. அதற்காக அரிசி பருப்போ அல்லது பணமோ கொடுப்பதுமில்லை வாங்குவதுமில்லை.

29. மேற் கண்ட தீர்மானங்களிலிருந்து நன்மை தின்மை விசேஷங்களை இன்னும் குறைந்த அளவிலும், சீர் திருத்தமாகவும் செய்து கொள்ளலாமே தவிர அதிகப்படியா கச் செய்வதில்லை.

30. நாம் உள்ளூர் அயலூர்களில் நடத் தும் விசேஷங்களிலும், அயலூர்களிலும்,

உள்ளூரிலும் பிறர் நடத்தும் விசேஷங்களில் நாம் கலந்து கொள்வதிலும் விரோதி ஹு ஆவணி மீ முதல்தேதி முதல் மேற்கண்ட தீர்மானங்களை அமலுக்குக் கொண்டு வந்து நடத்துகிறது.

31. மேலே கண்ட தீர்மானங்களைச் சரியாகக் கடைப்பிடித்து வருகிறதை அந்தந்த வகையாரும் கவனித்து அமல் நடத்தி வருகிறது.

32. கல்யாணம், சாந்திக்கல்யாணம், சதாபிஷேகம் முதலிய விசேஷங்களை நகரக் கோவில்களிலோ, ஸ்தலங்களிலோ போய்ச் செய்வதைச் சந்தோஷத்துடன் வரவேற்கிறது.

குறிப்பு:—

நன்மை தின்மை ஆகிய சகல விசேஷங்களிலும் உணவுப் பங்கீட்டுச் சட்ட திட்டங்கட்கு ஏற்க நடந்துகொள்ளுகிறது.

காரைக்குடி }
29—6—49. }

இங்ஙனம்,

**நகரத்தார்.**

